



உ

ஓம் கணபதி சித்திபுத்தி பரப்பிரம்மணே நமஹா

சென்னை பெருமாள்பேட்டையெனும்
ஸ்ரீ கணேச ஞானபுரத்தில் எழுந்தருளியிருக்கும்
ஸ்ரீ செல்வ விநாயகர்பேரில்

---

உயிர்வருக்க அந்தாதி

# தோத்திரப்பாமாலை.

---






ஸ்ரீமத் இந்திரபீடம் கரபாத்திரசுவாமிகள் ஆதீனம்
ஈசூர் - சச்சிதானந்த சுவாமிகள் மாணவர்
நீலமேக ஸ்வாமிகள் மாணவர்

## அருளானந்த ஸ்வாமிகளால்

இயற்றியது.



சென்னை-சூளை,
பெரியநாயகியம்மன் அச்சுக்கூடத்தில்
பதிப்பிக்கப்பட்டது.

சுக்கில ௵ தைமீ 11௳ 1929

---

கோ. பா. புண்ணியகோட்டி சுவாமி வேண்டுகோளின்படி,
சண்முகஞானபுரம் குயப்பேட்டை ம-ா-ா-ஸ்ரீ
கோவிந்தசாமி நாயுடு அவர்கள் பொருளுதவிசெய்து அச்சிட்டது

உ

ஓம் கணபதி சித்திபுத்தி பரப்பிரம்மணே நமஹா:

சென்னை பெருமாள்பேட்டையெனும்
ஸ்ரீ கணேச ஞானபுரத்தில் எழுந்தருளியிருக்கும்
ஸ்ரீ செல்வ விநாயகர்பேரில்

## உயிர்வருக்க அந்தாதி

# தோத்திரப்பாமாலை.





ஸ்ரீமத் இந்திரபீடம் கரபாத்திரசுவாமிகள் ஆதீனம்
ஈசூர் - சச்சிதானந்த சுவாமிகள் மாணவர்
நீலமேக ஸ்வாமிகள் மாணவர்

## அருளானந்த ஸ்வாமிகளால்

இயற்றியது.

சென்னை-சூளை,
பெரியநாயகியம்மன் அச்சுக்கூடத்தில்
பதிப்பிக்கப்பட்டது.

சுக்கில௵ தை௴ 11உ

கோ. பா. புண்ணியகோட்டி சுவாமி வேண்டுகோளின்படி,
சண்முகஞானபுரம் குயப்பேட்டை ம-ா-ா-ஸ்ரீ
கோவிந்தசாமி நாயுடு அவர்கள் பொருளுதவிசெய்து அச்சிட்டது.

ஓம் கணபதி சித்திபுத்தி பரப்பிரம்மனே நமஹா:

# உயிர் வருக்க அந்தாதி

# தோத்திரப்பாமாலை.



## விநாயகர் துதி வெண்பா.

சீர்பெருமாள் பேட்டையொளிர் செல்வவினா யகனருளை
பேர்பெருகும் தோத்திரப்பா பேசவே—சார்தவழும்
கோயிற் றிருவுருவா கூத்தாடுங் குஞ்சரத்தை
வாயாற வாழ்த்தி நெஞ்சே வாழ்.

அந்தமும் முடிவுமில் அறிவா யகண்டமாய்
அனைவர்க்கும் முதல் மூர்த்தியே
அன்னையாய் என்னைபருள் அமிர்த சஞ்சீவியாய்
அன்பர்க்குள் ஆனை முகனாய்
அந்தரம் பூதமுதல் அதிலுள்ள தோற்றமும்
அமர்ந்துமா உயிர்க ளுள்ளும்
அங்கங்கும் முணர்வாகி எங்குநிறை மெய்யனே
அடியனேன் சரண மென்றேன்
அந்திபக லிறவெலாம் அன்பாநின் பாதமலர்
அர்ச்சித்துத் துதிகள் செய்ய
அருளுமைப் பாலனே அானுருவி னாயகா
அடியர்குறை தீர்க்க யிங்கு
அந்தரத் துந்துமி அலர்ந்திட தேவர்முதல்
அமர்ந்த பெருமாள் பேட்டையில்
சிந்தைமகிழ் அருள்மூர்த்தி சித்திபுகழ் தருமூர்த்தி
செல்வ வினாயக மூர்த்தியே. 1

ஆராறு சாஸ்திரமும் ஆகம புராணமுதல்
ஆனைமுக னென்றுன் னையே
ஆருதனைத் சாதிகள் ஆங்காங்கும் எங்குநிறை
ஆனந்த மான குருவாய்
ஆதரித் துயிரெலாம் ஆற்றவே வழிகறையில்
ஆதியே யானை|வுருவாய்

ஆங்காங்கு மேவியே ஆதிமுதல் வுருவாகி
ஆருயிறை காக்கு மெய்யா
ஆறூற குளம்கெங்கை அங்கங்கு வழியெலாம்
ஆடிமின் றனந்த மயமாய்
ஆனந்த கணபதி ஆங்காங்கும் பிள்ளையாற்
ஆனதால் உலக முழுதும்
ஆறுதனைப் பணிக ளாகிநிறை சுரூபமாய்
ஆர்ந்து பெருமாள் பேட்டையில்
சிந்தைமகிழ் அருள்மூர்த்தி சித்திபுகழ் தருமூர்த்தி
செல்வ வினயக மூர்த்தியே. 2

இத்தனை வுருவமாய் இசைந்தனை யெங்கெங்கும்
இங்குநீ செல்வ வரசாய்
இகபரமும் மொத்திட இங்கெழுந் தருளினய்
இசைந்தமா கண ரூயறே
இத்தலமு மெத்தலமும் இன்றுமுதல் என்றுமே
இன்பமே எனக் கருளுவாய்
இன்றுனது பா தமலர் நின்றுதுதி யான்செய
இன்றெனது குறை யகலவே
இத்தேக துயரமுதல் இனிதேக துயரெலாம்
இல்லாமல் எனை காக்கவா
இதையமுறை யமூர்தமே என்னையாள் செல்வமே
இங்குநீ சோதி மயமாய்
இத்தேச முத்தர்புகழ் சச்சிதா னந்தனெதிர்
இலகு பெருமாள் பேட்டையில்
சிந்தைமகிழ் அருள்மூர்த்தி சித்திபுகழ் தருமூர்த்தி
செல்வ வினயக மூர்த்தியே. 3

ஈதுனக் கபிஷேகம் பால்தயிர் நெய்களால்
இளநீரு புனுகு பன்னீர்
ஈதென்ன பழவகைகள் மீண்மெமா நைவேத்யம்
மீட்டுவா றமிர்த மொழிய
ஈதுணவு கற்கண்டு இனியதேன் மோதகமும்
ஈதுண்டை மொச்சை கடலை
ஈந்துபே ரர்ச்சனைகள் மீட்டிப்பல வாத்திபமும்
மீரேழு உலக மெங்கும்

ஈதுனது செய்மலரின் மீட்டுவர் யெங்குமொளிர்
யிதென்ன பணிக ளெனவே
ஈறைந்து யிந்திரியம் யீட்டமா கரணமுதல்
யீன்றவா றென்று படவே
ஈதுதுதி என்றென்று கோவிந்தன் மலர்தூவி
இசைய பெருமா பேட்டையில்
சிந்தைமகிழ் அருள்மூர்த்தி சித்திபுகழ் தருமூர்த்தி
செல்வ விநாயக மூர்த்தியே. 4

உதவிபெற சர்சனர்கள் உனதுபுகழ் பெருமையினை
உணர்ச்சியுடன் துதி புரிகுவார்
உத்தமர்கள் முத்தர்களும் யுக்திபெற மூர்த்தியினை
உன்னடியி லுற்று புகழ்வார்
உதவியருள் முதல்மூர்த்தி உலகபுகழ் பாலர்களும்
உருதிபெற உனை யோதுவார்
உன்னடியி னருள்பெற்று உன்னுதமிழ் கலைஞானம்
உருதிபெற உனை புகழுவே
உதவமரர் புகழ்பெருக உனதுபணி சேவையினை
உளங்களித் துதிக்க வருவாய்
உசிதமலர் மல்லிகை கோங்குமந் தாரையுடன்
உனைபுகழ்ந் தோது மடியார்
உதவிபல சித்தியினை உணர்வுபெற முத்தியருள்
உரிய பெருமா பேட்டையில்
சிந்தைமகிழ் அருள்மூர்த்தி சித்திபுகழ் தருமூர்த்தி
செல்வ விநாயக மூர்த்தியே. 5

ஊழ்வினைக ளொழியவே ஊரூரும் நின்வடிவை
ஊற்றுவார் பல மணிகளால்
ஊத்தையாம் தொந்திவடர் ஊனே பெருக்கநான்
ஊரே திரிந்த நாய்போல்
ஊழ்வினைக லொழியவே ஊழியம் நின்னடியில்
ஊக்கமாய் செய்து மறியேன்
ஊனேற்க உயிரேற்க ஊத்தையாம் சரீரத்தை
ஊர்ந்தென்ன பயன டைந்தேன்
ஊழ்கழிய வகையேதும் ஊறாத பாவியான்
ஊத்தையேன் நோத்தி ரப்பா

ஊனே என்பொய் வாழ்க்கைஊழி காலத்ததென
ஊன்றியா னின் னடியிலே
ஊழ்வொழிய மெய்யடியை உன்னினே என்லேயால்
ஊற்று பெருமா பேட்டையில்
சிந்தைமகிழ் அருள்மூர்த்தி சித்திபுகழ் தருமூர்த்தி
செல்வ விளுயக மூர்த்தியே. 6

எங்குலிறை செல்வமே யேழையடி யார்க்குதவும்
எந்தையே இது சமயநான்
என்றென்றும் உன்னடியை எண்ணியென் னிதயத்தில்
எப்போது முன் சிந்தையாய்
எங்கள்குல தெய்வமே எங்குலிறை யமிர்தமே
எளியனேன் துய ரொழியவே
என்னேரம் சன்னதியில் ஏற்றுபணி செய்துநான்
என்றுமுன் திரு வடியினை
எங்கும்புகழ் போதனுய் எடுத்தனே யானைகளிர்
என்னையாள் கயிலை புதல்வா
எனையாண்டு கருணைபுரி எங்குலிறை புண்ணியா
எதியான புண்ணிய கோட்டி
எங்களை யாளவா யெழுந்தருளி யித்தருணம்
இறங்கி பெருமா பேட்டையில்
சிந்தைமகிழ் அருள்மூர்த்தி சித்திபுகழ் தருமூர்த்தி
செல்வ விளுயக மூர்த்தியே. 7

ஏத்திபணி யன்பனுய் யேற்றபொருள் யாவுமீந்
தேகமன தொருமை யுடனே
ஏருளமாகவே ஏற்றினேன் பல பணிகள்
ஏந்திவரு மருள்தந்தை தாய்
ஏற்றவுனை யனுதினமும் ஏங்கிநான் பலதுதிகள்
ஏற்கநீ செய்து வந்தேன்
ஏகம்பன் மைந்தனே ஏலவார் குழலிபுகழ்
ஏற்கவா மகிழ் மைந்தனே
ஏத்திடவு உனதடியை ஏழையான் கதிபெருக
ஏரிவா மூஷி கத்தில்
ஏங்கினே னனுதினமும் ஏற்றிபல மொழிகளால்
ஏற்குமா மலர் மாலையாய்

ஏற்கவே பாவியெனை யேத்தியிது சமயமே
ஏற்று பெருமா பேட்டையில்
சிந்தைமகிழ் அருள்மூர்த்தி சித்திபுகழ் தருமூர்த்தி
செல்வ விநாயக மூர்த்தியே. 8

ஐந்துகர மும்பதமும் அங்குசப் பாசவுணர்
ஆனை உருவான முகமே
ஐங்கோச உயிரளவு ஐம்பத்தோ ரட்க்ஷரமும்
அங்கங்கு எங்கு நீயாய்
ஐந்தொழில் படைத்தநீ அண்டாண்ட சராசரம்
அறிவறிவு பேத முதலாய்
ஐய்ந்தைந்து தத்துவமும் ஐந்துமுதல் மந்திரமும்
ஆனநீ பெங்கு மொளியே
ஐந்துபூ தமுமுதல் அதிலுள்ள மெய்உணர்வும்
அன்னைநீ கணேச உருவாய்
ஐங்கரன் னறுமுக அரிவாகி ஞானமருள்
அடியனேன் வினை யொழியவே
ஐந்துருவ பரநுநீ ஐந்தைந்து யிந்திரியம்
அரிய பெருமா பேட்டையில்
சிந்தைமகிழ் அருள்மூர்த்தி சித்திபுகழ் தருமூர்த்தி
செல்வ விநாயக மூர்த்தியே. 9

ஒருவடிவம் பி ணவமும் ஒருவடிவம் முழுமுதலாய்
ஒன்றாகும் தும்பி முகனே
ஒருவடிவே ஐந்துகர ஒருவடிவே ஆனைமுகம்
ஒன்றுபொரு ளெங்கு நிறைபாய்
ஒருவடிவே அகரமுமாய் ஒருவடிவே யுகரமுமாய்
ஒன்றாகி பலசு ருதியாய்
ஒருவடிவம் பாதளமும் ஒருவடிவம் பூதளமும்
ஒன்றே அண்டாண்ட முதலாம்
ஒருவடிவம் ஐம்பூதம் ஒருவடிவம் ஐந்துமுதல்
ஒன்றானை உயிர்க் குயிறதாய்
ஒருவடிவம் பிரம்மவுரு ஒருவடிவம் விஷ்ணுவுரு
ஒருவடிவம் ருத்ர ஹுருவாய்

ஒருவடிவம் சத்திமயம் ஒருவடிவம் சிவமயமும்
ஒன்றி பெரிமா பேட்டையில்
சிந்தைமகிழ் அருள்மூர்த்தி சித்திபுகழ் தருமூர்த்தி
செல்வ வினாயக மூர்த்தியே. 10

ஓங்கார ரூபனுனை ஓதுவார் துயரொழிய
ஓதவே னிது சமயமே
ஓம்நமோ நமோவென்று ஓலமிட் டடியவர்கள்
ஓயாத கண ராயரே
ஓங்கார ரீங்கார ஓங்குபுகழ் பிள்ளையார்
ஓமென்ற பிரண வத்தே
ஓதிடு மன்பர்க்கு ஓங்குதுணை மெய்யனுனை
ஓரேழு கடலு லகமும்
ஓங்கிடும் ஆரணம் ஓயாது அண்டமுதல்
ஓஓஓ வென்று முனையே
ஓருருவம் சப்தசுரம் ஓய்ந்திடும் மௌனநிலை
ஓரொரு வீட்டி னிடமும்
ஓங்கியே வளர்கின்ற ஓம்நமோ பிள்ளையார்
ஓங்கு பெருமா பேட்டையில்
சிந்தைமகிழ் அருள்மூர்த்தி சித்திபுகழ் தருமூர்த்தி
செல்வ வினாயக மூர்த்தியே. 11

ஔவையும் பேசல்போல் அடியனுன் செய்துதிகள்
அங்கீ கரிக்க தருணம்
அடிபணிந் தனுதினமும் அத்திபக விரவெலாம்
அபய மிட்டலறி நின்றேன்
ஔவைமகிழ் அங்கரா அவ்வுருதி அர்ச்சனைகள்
அணைவர்சிவ புண்ணிய கோட்டி
அரகரா சிவமெனவு அன்னைபால் மைந்தனமு
அடைந்துநின் திரு வடியிலே
ஔவையார் உனதடியி லமர்ந்துதுதி பூசனைசெய்
அருள்பெற்று கயிலை யுற்றாள்
அப்பனே ஒப்பிலா அரசே என்னமிர்தமே
அரியாத அருளா லனுக்
ஔவைதுதி நீதருக ஔவைபோல் நான்பெருக
அமர்ந்த பெருமா பேட்டையில்
சிந்தைமகிழ் அருள்மூர்த்தி சித்திபுகழ் தருமூர்த்தி
செல்வ வினாயக மூர்த்தியே. 12

போற்றி விருத்தம்.

சிவமாகி எங்குநிறை செல்வா போற்றி
சித்திமுத்தி தேவிமகிழ் சித்தாய் போற்றி
தவஞானக் களிருருவாம் தெய்வா போற்றி
தனியானை முழுமுதலாம் தவமே போற்றி
நிவர்த்தியாம் விக்கினங்கள் நிறைவே போற்றி
நிதியாகும் பலபொருளின் நிலையே போற்றி
பவமொழிக்கும் பத்திதரும் பரனே போற்றி
பதியருளுங் கணபதியுன் பாதம் போற்றிபோற்றி.

வாழ்த்து விருத்தம்.

மூர்த்திகளுன் மும்மூர்த்தி முடிவே வாழி
மூவுலகம் படைத்தளிக்கும் முதலே வாழி
தீர்த்தமுதல் கலைஞானத் திருவே வாழி
திகம்பரமக் களிருருவாந் தெய்வாவாழி
சார்ந்திலகுஞ் சதுர்த்திதினம் சரசா வாழி
சந்ததமும் எங்குநிறை சதிரே வாழி
பார்ந்திலக உலகமெலாம் பரனும் வாழி
பராபரமே பார்க்கவருள் வாழி வாழி.

சரணம் விருத்தம்.

அரகரா ஐங்கரா அரனே சரணம்
ஆனை முகத்தவா அருளே சரணம்
பரமுயிர் மூஷிகப் பதியே சரணம்
பாலக் கணபதியுயர் செல்வா சரணம்
திரமருள் திவ்ய தியாகா சரணம்
தினந்தினம் வழிகரை தேர்ந்தாய் சரணம்
சரவுயி ரசாமு சரசா சரணம்
சாமிக் கணபதி சரணம் சரணம்.

முடிவுரை.

பூசையும் முதலாயுள்ள பொருள்களும் யாவுமாகி
தேசையுன் னுருவேயானை தெளிவேயுன் தெய்வத்தன்மை
ஆசையும் னின்பேறன்பால் அநுதினம் துதிகளாக்கி
பாசையை யளிக்கவாழ்வாம் யருமறை முடிவேபோற்றி.

செல்வ விநாயகர் தோத்திரப்பாமாலை
முற்றிற்று.

---



ஶ்ரீ

உ

ஓம் தத் ஸத் :

ஸ்ரீமத், திருத்துருத்தி இந்திரபீடம் சரபாந்திரசுவாமிகள் ஆதீனம் ஈசூர் - சச்சிதானந்த சுவாமிகளின் மாணவருக்கு மாணவர்களில் ஒருவராகிய முனுகப்பட்டு மடம் அருளானந்தரால் இயற்றிய நூல்களின் விபரம்.



1. ஸ்ரீமத் தர்மா அம்பிகை தோத்திரப்பாமாலை.
2. ஸ்ரீமத் நீலமேக சுவாமிகளின் தோத்திரப்பாமாலை.
3. ஸ்ரீமத் ஈசூர் சச்சிதானந்த சுவாமிகளின் தோத்திரப்பாமாலை
4. ஸ்ரீமத் உண்மைநிலை விளக்க நூல் வெண்பா நூறு.
5. ஸ்ரீமத் சண்முகானந்த சுவாமிகளின் தோத்திரப்பாமாலை.
6. ஸ்ரீமத் கோவிலூர் பரிபூரணானந்தசுவாமிகளின் தோத்திரப்பா [மாலை
7. ஸ்ரீமத் முனுகப்பட்டு மடாலயம் சாந்த விநாயகரின் தோத்திரப்பாமாலை
8. ஸ்ரீமத் கணேசஞானபுரம் செல்வ விநாயகரின் உயிர்வர்க்கப்பா தோத்திரப்பாமாலை
9. ஸ்ரீமத் திருவல்லிக்கேணி குப்பேட்டையின் கற்பக விநாயகரின் தோத்திரப்பாமாலை.

மங்களவாழ்த்து

உணராக்ஷி சுந்தரம் செல்வ விநாயகா மங்களம்
உடலாக்ஷி சுந்தரம் செல்வ விநாயகா மங்களம்
மனமாக்ஷி சுந்தரம் செல்வ விநாயகா மங்களம்
உயிராக்ஷி சுந்தரம் செல்வ விநாயகா மங்களம்
மீனாட்சி சுந்தரம் செல்வ விநாயகா மங்களம்
காமாட்சி சுந்தரம் செல்வ விநாயகா மங்களம்
விசாலாட்சி சுந்தரம் செல்வ விநாயகா மங்களம்
வானாட்சி சுந்தரம் செல்வ விநாயகா மங்களம்
ஞானாட்சி சுந்தரம் செல்வ விநாயகா மங்களம்
தனலாக்ஷி சுந்தரம் செல்வ விநாயகா மங்களம்
தினலாக்ஷி சுந்தரம் செல்வ விநாயகா மங்களம்
ஜெனராக்ஷி சுந்தரம் செல்வ விநாயகா மங்களம் மங்களம் மங் [களம்

முற்றிற்று.